மன்னியமாமறையோர்கள்போற்றும்வலஞ்சுழிவாணர்தம்மே
லுன்னியசிந்தையினீங்ககில்லார்க்குயர்வாம்பிணிபோமே. (௩)

விடையொருபாலொருபால்விரும்புமெல்லியல்புல்கியதோர்
சடையொருபாலொருபாலிடங்[illegible]டாழ்குழல்போற்றிசைப்ப
நடையொருபாலொருபாறசிலம[illegible]ளும்வலஞ்சுழிசே
ரடையொருபாலடையாதசெய்யுஞ்செய்கையறியோமே. (௪)

கையமரும்மழுநாகம்வீணைகலைமான்மறியேந்தி
மெய்யமரும்பொடிப்பூசிவீசுகுழையார்தருதோடும்
பையமரும்மரவாடலாடும்படர்சடையார்க்கிடமா
மையமரும்பொழில்சூழும்வேலிவலஞ்சுழிமாநகரே. (௫)

தண்டொடுசூலந்தழையவேந்தித்தையலொருபாகங்
கண்டிடுபெய்பலிபேணிநாணாகரியினுரிதோலர்
வண்டிடுமொய்பொழில்சூழ்ந்தமாடவலஞ்சுழிமன்னியவா
தொண்டொடுகூடித்துதைந்துநின்றதொடர்வைதொடர்வோமே ()

கல்லியலும்மலையங்கைநீங்கவளைத்துவளையாதார்
சொல்லியலும்மதின்மூன்றுஞ்செறறசுடரானிடர்நீங்க
மல்லியலுந்திரடோளெம்மாதிவலஞ்சுழிமாநகரே
புல்கியவேந்தனைப்புல்கியேத்தியிருப்பவர்புண்ணியரே. (௭)

வெஞ்சினவாளரக்கனவரையைவிறலாலெடுத்தான்றோ
ளஞ்சுமோராறிருநான்குமொன்றுமடர்த்தாரழகாய
நஞ்சிருள்கண்டத்துநாகரென்றுநணுகுமிடம்போலு
மஞ்சுலவும்பொழில்வண்டுகிண்டும்வலஞ்சுழிமாநகரே. (௮)

ஏடியநான்முகன்சீர்நெடுமாலெனநின்றவர்காணார்
கூடியகூரெரியாய்நிமிர்ந்தகுழகருலகேத்த
வாடியவெண்டலைகையிலேந்திவலஞ்சுழிமேயவெம்மான்
பாடியநான்மறையாளர்செய்யுஞ்சரிதைபலபலவே. (௯)

குண்டரும்புத்தருங்கூறையின்றிக்குழுவாருரைநீத்துத்
தொண்டருந்தன்றொழில்பேணநின்றகழலானழலாடி
வண்டமரும்பொழின்மல்குபொன்னிவலஞ்சுழிவாணனெம்மான்
பண்டொருவேள்விமுனிந்துசெற்றபரிசேபகர்வோமே. (௧௦)

வாழியெம்மானெனக்கெந்தைமேயவலஞ்சுழிமாநகர்மேற்
காழியுண்ஞானசம்பந்தன்சொன்னகருத்தின்றமிழ்மாலை
யாழியிவையகத்தேத்தவல்லாரவர்க்குந்தமருக்கு
மூழியொருபேருமின்பமோர்க்கும்முருவும்முயர்வாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருநாரையூர் - பண் - பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

கடலிடைவெங்கடுநஞ்சமுண்டகடவுள்விடையேறி
யுடலிடையிற்பொடிப்பூசவல்லானுமையோடொருபாக
னடலிடையிற்சிலைதாங்கியெய்தவம்மானடியார்மே
னடலைவினைத்தொகைதீர்த்துகந்தானிடநாரையூர்தானே. (க)

விண்ணின்மின்னேர்மதிதுத்திநாகம்விரிபூமலர்க்கொன்றை
பெண்ணின்முன்னே மிகவைத்துகந்தபெருமானெரியாடி
நண்ணியதன்னடியார்களொடுந்திருநாரையூரானென்
றெண்ணுமினும்வினைபோகும்வண்ணமிறைஞ்சுநிறைவாமே. (உ)

தோடொருகாதொருகாதுசேர்ந்தகுழையானிழைதோன்றும்
பீடொருகாலபிரியாதுநின்றபிறையான்மறைபாதி
நாடொருகாலமுஞ்சேரநின்றதிருநாரையூரானைப
பாடுமினீர்பழிபோகும்வண்ணம்பயிலுமுயர்வாமே (ங)

வெண்ணிலவஞ்சடைசேரவைத்துவிளங்குந்தலையேந்திப்
பெண்ணிலமர்ந்தொருகூறதாயபெருமானருளார்ந்த
வண்ணன்மன்னியுறைகோயிலாகுமணிநாரையூர்தன்னை
நண்ணலமர்ந்துறவாக்குமின்கணடலைகரிசறுமே. (ச)

வானமர்தீவளிநீர்நிலனாய்வழங்கும்பழிபாவ
மூனமரின்னுயிர்தீங்குகுற்றமுறைவாற்பிறிதின்றி
நானமரும்பொருளாகிநின்றான்றிருநாரையூரெந்தை
கோனவனைக்குறுகக்குறுகாகொடுவல்வினைதானே (ரு)

கொக்கிறகுங்குளிர்சென்னிமத்தங்குராமலர்சூடி
யக்கரவோடரையார்த்துகந்தவழகன்குழல்பாக
நக்கமருந்திருமேனியாளன்றிருநாரையூர்மேவிய
பக்கமருமனத்தோர்கடமைப்புணருமபுகழன்றே (சு)

ஊழியுமின்பமுங்காலமாகியுயருந்தவமாகி
மேழிசையின்பொருள்வாழும்வாழ்க்கைவினையின்புணர்ப்பாகி
நாழிகையும்பலஞாயிறாகிநளிநாரையூர்தன்னில
வாழியர்மேதருமைந்தர்செய்யும்வகையின்விளைவாமே. (எ)

கூசமிலாதரக்கன்வரையைக்குலுங்கவெடுத்தான்றோ
ணாசமதாகியிறவடர்த்தவிரலான்கரவாதார்
பேசவியப்பொடுபேணநின்றபெரியோனிடம்போலுந்
தேசமுறப்புகழ்செம்மைபெற்றதிருநாரையூர்தானே (அ)

பூமகனும்மவனைப்பயந்தபுயலார்நிறத்தானு
மாமளவுந்திரிந்தேத்தக்காண்டலறிதற்கரியானூர்

பாமருவுங்குணத்தோர்களீண்டிப்பலவும்பணிசெய்யுந்
தேமருவுநதிகழ்சோலைசூழ்ந்ததிருநாரையூர்தானே. (௯)

வெற்றரையாகியவேடங்காட்டித்திரிவார்துவராடை
யுற்றரையோர்களுரைக்குஞ்சொல்லையுணராதெழுமின்கள்
குற்றமிலாததோர்கொள்கையெம்மான்குழகன்றொழிலாரப்
பெற்றரவாட்டிவரும்பெருமான்றிருநாரையூர்சேர்வே. (௧0)

பாடியலுந்திரைசூழ்புகலித்திருஞானசம்பந்தன்
சேடியலும்புகழோங்குசெம்மைத்திருநாரையூரான்மேற
பாடியதண்டமிழ்மாலைபத்தும்பரவித்திரிந்தாக
வாடியசிந்தையினார்க்குநீங்குமவலக்கடறானே. (௧௧)

திருச்சிற்றம்பலம

---

## திருவாலவாய்-நாலடிமேல்வைப்பு.

திருச்சிற்றம்பலம்.

வேதவேள்வியைநிந்தனைசெய்துழ, லாதமிலலியமணொடுதேரரை
வாதிலவென றழிக்கததிருவுள்ளமே, பாதிமாதுடனாயபரமனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென, லைவாயிலுறையுமெம்மாதியே. (௧)

வைதிகததின்வழியொழுகாதவக், கைதவமுடைக்காரமண்டேரரை
யெயதிவாதுசெயததிருவுளாமே, மைதிகழ்தருமாமணிகண்டனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்-னாலவாயிலுறையுமெமமாதியே (௨)

மறைவழக்கமிலாதமாபாவிகள, பறிதலைக்கையர்பாயுடுப்பார்களை
முறியவாதுசெயததிருவுள்ளமே, மறியுலாங்கையின்மாமழுவாளனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்-னாலவாயிலுறையுமெம்மாதியே. (௩)

அறுத்தவங்கமாராயினநீர்மையைக், கறுத்தவாழமண்கையர்கடம்மொடுஞ்
செறுத்துவாதுசெயததிருவுள்ளமே, முறித்தவான்மதிக்கண்ணிமுதல்வனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென-னாலவாயிலுறையுமெம்மாதியே (௪)

அந்தணாளர்புரியுமருமறை, சிந்தைசெயயாவருந்திறங்களைச்
சிந்தவாதுசெயததிருவுள்ளமே, வெந்தநீறதணியும்விகிர்தனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்-னாலவாயிலுறையுமெம்மாதியே. (௫)

வேட்டுவேள்விசெயும்பொருளைவிளி,மூட்டுச்சிந்தைமுருட்டமண்குண்டரை
யோட்டிவாதுசெயததிருவுள்ளமே, காட்டிலானையுரித்தவெங்கள்வனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்-னாலவாயிலுறையுமெம்மாதியே. (௬)

அழல்தோம்புமருமறையோர்திறம், விழலதென்னுமருகர்திறத்திறங்
கழலவாதுசெயத்திருவுள்ளமே, தழலிலங்குதிருவுருச்சைவனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்-னாலவாயிலுறையுமெம்மாதியே. (௭)

நீற்றுமேனியராயினர்மேலுற்ற, காற்றுக்கொள்ளவுநில்லாவமணரைத்
தேற்றிவாதுசெயத்திருவுள்ளமே, யாற்றலவ்வரக்கர்க்குமருளினாய்
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்-னாலவாயிலுறையுமெம்மாதியே. (அ)

நீலமேனியமணர்திறத்துநின், சீலமவாதுசெயத்திருவுள்ளமே
மாலுநான்முகனுங்காண்பரியதோர், கோலமேனியதாகியகுன்றமே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்-னாலவாயிலுறையுமெம்மாதியே. (௯)

அன்றுமுப்புரஞ்செற்றவழகநின், றுன்றுபொற்கழல்பேணவருகரைத்
தென்றவாதுசெயத்திருவுள்ளமே, கன்றுசாக்கியர்காணாத்தலைவனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்-னாலவாயிலுறையுமெம்மாதியே (௰)

கூடலாலவாய்க்கோனைவிடைகொண்டு, வாடன்மேனியமணரைவாட்டிட
மாடக்காழிச்சம்பந்தன்மதித்தவிப், பாடல்வல்லவர்பாக்கியவாளரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருக்கயிலாயமுந்-திருவானைக்காவுந்-திருமயேந்திரமுந்-திருவாரூருங்-கூடச்சதுக்கம்.

திருச்சிற்றம்பலம்.

மண்ணதுவுண்டரிமலரோன்காணா, வெண்ணாவல்விரும்புமயேந்திரருங்
கண்ணதுவோங்கியகயிலையாரு, மண்ணலாரூராதியானைக்காவே (௧)

வந்துமாலயனவர்காண்பரியார், வெந்தவெண்ணீறணிமயேந்திரருங்
கந்தவார்சடையுடைக்கயிலையாரு, மந்தணாரூராதியானைக்காவே. (௨)

மாலயன்றேடியமயேந்திரருங், காலனையுயிர்கொண்டகயிலையாரும்
வேலையதோங்குமவெண்ணாவலாரு, மாலையாரூராதியானைக்காவே. (௩)

கருடனையேறியவனோகாணார், வெருள்விடையேறியமயேந்திரருங்
கருடருகண்டத்தெங்கயிலையாரு மருளாரூராதியானைக்காவே. (௪)

மதிதருவானான்முகன்வணங்கரியார், மதியதுசொல்லியமயேந்திரருங்
கதிர்முலைபுல்கியகயிலையாரு, மதியணாரூராதியானைக்காவே. (௫)

சக்கரம்வேண்டுமாலபிரமன்காணா, மிக்கவாகயிலைமயேந்திரருந்
தக்கனைத்தலையரிதழலுருவ, ரக்கணியவராரூராதியானைக்காவே. (௬)

கண்ணனுநான்முகன்காண்பரியார், வெண்ணாவல்விரும்புமயேந்திரருங்
கண்ணப்பர்க்கருள்செய்தகயிலையெங்க, ளண்ணலாரூராதியானைக்காவே. (௭)

கடல்வண்ணனான்முகன்காண்பரியார், தடவரையரக்கனைத்தலைநெரித்தார்
விடமதுண்டவெம்மயேந்திரரும, டல்விடையாரூராதியானைக்காவே. (அ)

ஆதிமாலயனவர்காண்பரியார், வேதங்கடுதிசெயுமயேந்திரருங்
காதிலொர்குழையுடைக்கயிலையாரு, மாதியாரூரெந்தையானைக்காவே. (௯)

அறிவிலமண்புத்தரறிவுகொள்ளேல், வெறியுமான்கரத்தாரூர்மயேந்திரரு
மறிகடலோனயன்றேடத்தானு, மறிவரியகயிலையோனானைக்காவே. (௰)

ஏனமாலயனவர்காண்பரியார், கானமார்கயிலைநன்மயேந்திரு
மானவாருராதியானைககாவை, ஞானசம்பநதனதமிழ்சொல்லுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

———(*)———

## திருப்பிரமபுரம்-ஈரடி.

திருச்சிற்றம்பலம்.

வரமதேகொளாவுரமதேசெயும்புரமெரித்தவன்பிரமநற்புரத்
தரனனுமமேபரவுவாரகள்சீரவிரவுநீளபுவியே (௧)

சேணுலாமதிலவேணுமண்ணுளோர்காணமனறலார்வேணுநற்புரத்
தாணுவினகழலபேணுகினறவாணியொத்தவரே. (௨)

அகலமார்தரைபபுகலுநான்மறைக்கிகலியோர்கள்வாழ்புகலிமாநகர்ப்
பகலசெய்வோனெதிர்ச்சகலசேகரனகிலநாயகனே (௩)

துஙகமாகரிபங்கமாவடுஞ்செஙகையானிகழ்வெங்குருவதிக
ழங்கணனடித்தஙகையாறெருழததங்குமோவினையே (௪)

காணியொண்பொருட்கறறவாக்கிகையுடைமையோரவர்காதல்செயயுநற்
றோணிவண்புரத்தாணியெனபவர்தூமதியினரே. (௫)

ஏநதராவெதிர்வாய்நதநுண்ணிடைபபூநதணோதியாள்சேர்ந்தபங்கினன்
பூநதராய்தொழுமாநதாமேனிமேறசேர்நதிராவினையே (௬)

சுரபுரத்தினைதுயர்செயதாருகனுஞ்சவெஞ்சினக்காளியைததருஞ்
சிரபுரததுளானெனனவலலவர்சிததிபெறறவரே. (௭)

உறவுமாகியறறவர்களுக்குமாநிதிகொடுதது நீள்புவியிலங்குசீரப்
புறவமாநகாககிறைவனேயெனததெறிகிலாவினேய. (௮)

பண்புசேரிலங்கைககுநாதனன்முடிகள்பத்தையுங்கெடநெரித்தவன்
சண்பையாதியைதொழுமவாகளேச்சாதியாவினையே (௯)

ஆழியங்கையிற்கொண்டமாலயனறிவொணாததோர்வடிவுகொண்டவன்
காழிமாநகாககடவுளுமமேகறறெறறவமே. (௧0)

விச்சையொன்றிலாச்சமணர்சாக்கியப்பிச்சதஙகளைக்கரிசறுத்தவன்
கொச்சைமாநகாககன்புசெயபவாகுணங்கள்கூறுமினே. (௧௧)

கழுமலததினுட்கடவுள்பாதமேகருதுஞானசம்பநதனின்றமிழ்
முழுதுமவலலவர்க்கின்பமேதருமுககணெம்மிறையே. (௧௨)

திருச்சிற்றம்பலம.

## திருவீழிமிழலை-ஈரடி.

திருச்சிற்றம்பலம்.

வேலினேர்தருகண்ணினளுமைபங்கணங்கணன்மிழலைமாநக
ராலநீழலின்மேவிஞடிககன்பர்துன்பிலரே. (௧)

விளங்குநான்மறைவல்லவேதியர்மலகுசீர்வளர்மிழலையானடி
யுளங்கொள்வார்தமையுளங்கொள்வார்வினையொல்லையாசறுமே. (௨)

விசையினோடெழுபசையுநஞ்சினையுதைவுசெய்தவன்மிழலைமாநக
ரிசையுமீசனைநசையின்மேவினான்மிசைசெயாவினையே. (௩)

வென்றிசேர்கொடிமூடுமாமதின்மிழலைமாநகர்மேவிநாடொறு
நின்றவாதிதனடிநினைப்பவர்துன்பமொன்றிலரே. (௪)

போதகந்தனையுரிசெய்தோன்புயநேர்வரும்பொழின்மிழலைமாநக
ராதரஞ்செய்தவுடிகள்பாதமலாலோர்பற்றிலமே. (௫)

தக்கன்வேள்விகைச்சாடினார்மணிதொக்கமாளிகைமிழலைமேவிய
நக்கஞ்சடிதொழுவர்மேல்வினைநாடொறுங்கெடுமே. (௬)

போரணவுமுப்புரமெரித்தவன்பொழில்கள்சூழ்தருமிழலைமாநகர்ச்
சேருமீசனைச்சிந்தைசெய்பவர்தீவினைகெடுமே. (௭)

இரக்கமிற்றொழிலரக்கனுடனெருக்கினானமிகுமிழலையானடி
சிரக்கொள்பூவெனவொருக்கினாபுகழ்பரக்குநீளுலகே (௮)

துன்றுபூமகன்பன்றியானவனொன்றுமோராகிலாமிழலையானடி
சென்றுபூம்புனனின்றுதூவினார்நன்றுசேர்பவரே (௯)

புத்தர்கைச்சமண்பித்தர்பொய்க்குவைவைததவித்தகன்மிழலைமாநகர்
சித்தம்வைத்தவரித்தலத்தினுண்மெய்யதவத்தவரே. (௧௦)

சந்தமார்பொழின்மிழலையீசனைச்சண்பைஞானசம்பந்தன்வாய்நவில
பந்தமார்தமிழ்பத்தும்வல்லவர்பத்தராகுவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## திருப்பல்லவனீச்சரம்-ஈரடி

திருச்சிற்றம்பலம்.

பரசுபாணியர்பாடல்வீணையர்பட்டினத்துறைபல்லவனீச்சரத்
தரசுபேணிநின்றாரிவர்தன்மையறிவாரார். (௧)

பட்டநெற்றியர்நட்டமாடுவர்பட்டினத்துறைபல்லவனீச்சரத்
திட்டமாயிருப்பாரிவர்தன்மையறிவாரார். (௨)

பவளமேனியர்திகழுநீற்றினர்பட்டினத்துறைபல்லவனீச்சரத்
தழகராயிருப்பாரிவர்தன்மையறிவாரார். (௩)

பண்ணில்யாழினர்பயிலுமொந்தையர்பட்டினத்துறைபல்லவனீச்சரத்
தண்ணலாயிருப்பாரிவர்தன்மையறிவாரார். (௪)

பல்லிலோட்டினர்பலிகொண்டுண்பவர்பட்டினத்துறைபல்லவனீச்சரத்
தொல்லையாட்டுகந்தாரிவர்தன்மையறிவாரார். (௫)

பச்சைமேனியர்பிச்சைகொள்பவர்பட்டினத்துறைபல்லவனீச்சரத்
திச்சையாயிருப்பாரிவர்தன்மையறிவாரார் (௬)

பைங்கணேற்றினர்திங்கள்சூடுவர்பட்டினத்துறைபல்லவனீச்சரத்
தெங்குமாயிருப்பாரிவர்தன்மையறிவாரார். (௭)

பொதங்கைதொழுவேதமோதுவர்பட்டினத்துறைபல்லவனீச்சரத்
தாதியாயிருப்பாரிவர்தன்மையறிவாரார். (௮)

படிகொண்மேனியர்கடிகொள்கொன்றையர்பட்டினத்துறைபல்லவனீச்சரத்
தடிகளாயிருப்பாரிவர்தன்மையறிவாரார். (௯)

பறைகொள்பாணியர்பிறைகொள்சென்னியர்பட்டினத்துறைபல்லவனீச்சரத்
திறைவராயிருப்பாரிவர்தன்மையறிவாரார். (௧௦)

வானமாள்வதற்கூனமொன்றிலைமாதர்பல்லவனீச்சரத்தானை
ஞானசம்பந்தனற்றமிழ்சொல்லவல்லவர் நல்லவர் (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருக்கழுமலம்-திருஇயமகம்

திருச்சிற்றம்பலம்.

உற்றுமைசேர்வதுமெய்யினையேயுணர்வதுநின்னருண்மெய்யினையே
கற்றவர்காய்வதுகாமனையேகனல்விழிகாய்வதுகாமனையே
யற்றமறைப்பதுமுன்பணியேயமரர்கள்செய்வதுமுன்பணியே
பெற்றுமுகந்ததுகந்தனையேபிரமபுரத்தையுகந்தனையே (௧)

சதிமிகவந்தசலந்தரனேதடிசிரநேர்கொள்சலந்தரனே
யதிரொளிசேர்திகிரிப்படையாலமர்ந்தனரும்பர்துதிப்படையால்
மதிதவழ்வெற்பதுகைச்சிலையேமருவிடமேற்பதுகைச்சிலையே
விதியினிலிட்டவிரும்பரனேவேணுபுரத்தைவிரும்பரனே. (௨)

காதமரத்திகழ்தோடினனேகானவனாய்க்கடிதோடினனே
பாதமதாற்கூற்றுதைத்தனனேபார்த்தனுடலம்புதைத்தனனே
தாதவிழ்கொன்றைதரித்தனனேசார்ந்தவினையதரித்தனனே
போதமமருமுரைப்பொருளேபுகலியமர்ந்தபரம்பொருளே. (௩)

மைத்திகழ்நஞ்சுமிழ்மாசுணமேமகிழ்ந்தரைசேர்வதுமாசுணமே
மெய்த்துடல்பூசுவர்மேன்மதியேவேதமதோதுவர்மேன்மதியே
பொய்த்தலையோடுறுமத்தமதேபுரிசடைவைத்ததுமத்தமதே
வித்தகராகியவெங்குருவேவிரும்பியமர்ந்தனர்வெங்குருவே (௪)

உடன்பயில்கின்றனன்மாதவனேயுறுபொறிகாய்ந்திசைமாதவனே
திடம்படுமாமறைகண்டனனேதிரிகுணமேவியகண்டனனே
படங்கொளரவரைசெய்தனனேபகடுரிகொண்டரைசெய்தனனே
தொடர்ந்ததுயர்க்கொருநஞ்சிவனேதோணிபுரத்துறைநஞ்சிவனே.

திகழ்கையதும்புகைதழைகழலேதேவர்தொழுவதுந்தங்கழலே
இகழ்பவர்தாமொருமானிடமேயிருந்தனுமேவாமடழின்மானிடமே
மிகவருநீர்கொளுமஞ்சடையேமின்னிகாகின்றதுமஞ்சடையே
தகவிரதங்கொளவாசுந்தரரேதக்கதராயுறைசுந்தரரே. (௬)

ஒர்வருகண்கனிணைக்கயலேயுமையவள்கண்கனிணைக்கயலே
பேர்மருவுங்கழனுகமதேயெழிலசொளுதாசனுகமதே
நீர்வருகொந்தளகங்கையதேநெடுஞ்சடைமேவியகங்கையதே
சேர்வருயோகதியம்பகனேசிரபுரமேயதிகமபகனே. (௭)

ாண்டுதுயிலமாப்பினனேயிருங்கணிடந்தடியப்பினனே
தீண்டலரும்பரிசககரமேதிகழ்நகொளிசோவதுசக்கரமே
வேண்டிவருந்தநகைததலேயேமிகைத்தவரோடுநகைத்தலையே
பூண்டனர்சேரலுமாபதியேபுறவமமர்ந்ததுமாபதியே (௮)

நின்மணிவாயதுநீழலையேநேசமதானவாநீழலையே
யுன்னிமநதெழுசங்கமதேயொளியதனோடுறு ங்கமதே
கன்னியரைககவருங்களனேகடலவிடமுண்டகருங்களனே
மன்னிவரைப்பதிசண்பையதேவாரிவயனமலிசண்பையதே. (௯)

இலங்கையரக்கர்தமக்கிறையேயிடந்துகயிலையெடுக்கிறையே
புலன்கள்கெடவுடனபாடினனேபொறிகள்கெடவுடன்பாடினனே
இலங்கியமேனியிராவணனேயெயதுபெயருமிராவணனே
கலந்தருளபெற்றதுமாவசியேகாழியானடிமாவசியே (௧௦)

கண்ணிகள்புண்டரிகத்தினனேகலந்திரிபுண்டரிகத்தினனே
மண்ணிகழும்பரிசேனமதேவானகமேயவகைசேனமதே
நணணியடிமுடியெய்தலரேநளிரமலிசோலையிலெய்தலரே
பண்ணியலகொச்சைப்பசுபதியேபசுமிகவூர்வர்பசுபதியே (௧௧)

பருமதின்மதுரைமன்னவையெதிரேபதிகமதெழுதிலையவையெதிரே
வருநதியிடைமிசைவருகரனேவசையொடுமலர்கெடவருகரனே
கருதலிலிசைமுரறருமருளேகழுமலமமரிறைதருமருளே
மருவியதமிழ்விரகன்மொழியேவலலவாதம்மிடாதிடமொழியே (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவேகப்பம்-திருஇயமகம்.

திருச்சிற்றம்பலம்.

பாயுமால்விடைமேலொருபாகனேபாவைதன்னுருமேலொருபாகனே
தூயவானவர்வேதத்துவனியேசோதிமாலெரிவேதத்துவனியே
யாயுநன்பொருளுண்பொருளாதியேயாலநீழலவரும்பொருளாதியே
காயவின்மதன்பட்டதுகம்பமேகண்ணுதற்பரமற்கிடங்கம்பமே. (௧)

சடையணிந்ததுவெண்டலைமாலையேதம்முடம்பிலும்வெண்டலைமாலையே
படையிலங்கையிற்சூலமதென்பதேபார்த்திலங்கையிற்சூலமதென்பதே

புடைபரப்பனபூதகணங்களேபோற்றிசைப்பனபூதகணங்களே
கடைகடோறுமிரப்பதுமிச்சையேகம்பமேவியிருப்பதுமிச்சையே. ()

வெள்ளெருக்கொடுதும்பைமிலைச்சியேவேறுமுன்செலத்தும்பைமிலை
யள்ளுநீறதுபூசுவதாகமேயானமாசுணமூசுவதாகமே [ச்சியே
புள்ளியாடையுடுப்பதுகத்துமேபோனவூழியுடுப்பதுகத்துமே
கள்ளுலாமலர்க்கம்பமிருப்பதேகாஞ்சிமாநகர்க்கம்பமிருப்பதே (௩)

முற்றலாமையணிந்தமுதல்வரேமூரியாமையணிந்தமுதல்வரே
பற்றிவாளரவாட்டுமபரிசரேபாலுநெய்யுகந்தாட்டுமபரிசரே
வற்றலோடுகலம்பலிதேர்வதேவானிலோடுகலம்பலிதேர்வதே
கற்றிலாமனங்கம்பமிருப்பதேகாஞ்சிமாநகர்க்கம்பமிருப்பதே. (௪)

வேடனாகிவிசையற்கருளியேவேலைநஞ்சமிசையற்கருளியே
யாடுபாம்பரையார்த்தது . டாமேதயஞ்சுபூதமுமார்த்ததுடையதே
கோடுவாணமதிக்கண்ணியழகிதேகுற்றமின்மதிக்கண்ணியழகிதே
காடுவாழ்பதியாவதுமும்மதேகம்பமாபதியாவதுமும்மதே. (௫)

இரும்புகைக்கொடிதங்கழல்கையதேயிமயமாமகணங்கழல்கையதே [கியே
யரும்புமொய்த்தமலர்ப்பொறைதாங்கியேயாழியானறனமலர்ப்பொறைதாங
பெருமபகனடமாடுதலசெய்துமேபேதைமாதொடுநடமாடுதலசெய்துமே
கருமபுமொயததெழுகமபமிருபபதேகாஞ்சிமாநகர்ககமபமிருபபதே (௬)

மூதிரமங்கைதவஞ்செய்தகாலமேமுனபுமஙகைகவஞ்செய்தகாலமே
வெதிர்களோடகிலசநதமுருட்டியேவேழமோடகிலசநதமுருட்டியே
யதிரவாறுவாதகெழுவததொடேயானையாடுவரதகெழுவததொடே
கதிர்கொளபூண்முலைககமபமிருபபதேகாஞ்சிமாநகாககமபமிருபபதே. (௭)

பண்டரக்கனெடுத்தபலத்தையேபாயந்தரக்கனெடுத்தபலததையே
கொண்டரக்கியதுங்காலவிரலையேகோளரக்கியதுங்காலவிரலையே
யுண்டுழன்றதுமுண்டத்தலையிலேயுடுபதிக்கிடமுண்டததலையிலே
கண்டநஞ்சமடக்கினைகம்பமேகடவுணீயிடங்கொண்டதுகம்பமே.

தூணியானசுடர்விடுசோதியேசுத்தமானசுடர்விடுசோதியே
பேணியோடுபிரமப்பறவையேபிததனைபிரமப்பறவையே
சேணினோடுகீழூழிதிரிந்துமேசித்தயோடுகீழூழிதிரிந்துமே
காணநின்றனருற்றதுகம்பமேகடவுணீயிடமுற்றதுகம்பமே. (௯)

ஒருடம்பினையீருருவாகவேயுன்பொருட்டிறமீருருவர்கவே
யாருமெய்தற்கரிதுபெரிதுமேயாற்றலெய்தற்கரிதுபெரிதுமே
தோரும்மறியாதுதிகைப்பரேசித்தமும்மறியாதுதிகைப்பரே
காரிறத்தமணர்க்கொருகமபமேகடவுணீயிடங்கொண்டதுகம்பமே.

கந்தமார்பொழில்சூழ்தருகம்பமேகாதலசெய்பவர்தீர்த்திடுகம்பமே
புந்திசெய்துவிரும்பிப்புகலியேபூசுரன்றன்விரும்பிப்புகலியே

யந்தமிழ்பொருளாயினகொண்டுமேயண்ணலின்பொருளாயினகொண்டுமே
பந்தனின்னியலபாடியபத்துமேபாடவல்லவராயினபத்துமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

தொண்டைநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - ஏகாம்பரநாதர் - தேவியார் - காமாக்ஷியம்மை

---

## திருவாலவாய்-பண்-திருஇயமகம்.

திருச்சிற்றம்பலம்.

ஆலநீழலுகந்ததிருக்கையேயானபாடலுகந்ததிருக்கையே
பாலினேர்மொழியாளொருபங்கனேபாதமோதலர்சேர்புரபங்கனே
கோலநீறணிமேதகுபூதனேகோதிலார்மனமேவியபூதனே
யாலநஞ்சமுதுண்டகளத்தனேயாலவாயுறையண்டகளத்தனே (க)

பாதியாயுடன்கொண்டதுமாலையேபாம்புதார்மலர்கொன்றைநன்மாலையே
கோதினீறதுபூசிடுமாகனேகொண்டநறைகையின்மானிடமாகனே
நாதனுடொறுமாடுவதானையேநாடியன்றுரிசெய்ததுமானையே
வேதநூல்பயில்கின்றதுவாயிலேவிகிர்தனூர்திருவாலநல்வாயிலே. (உ)

காடுநீடதுறப்பலகத்தனேகாதலானினைவார்தமக்கத்தனே
பாடுபேயொடுபூதமசிக்கவேபல்பிணத்தசைநாடியசிக்கவே
நீடுமாநடமாடவிருப்பனேநின்னடித்தொழநாளுமிருப்பனே
யாடநீள்சடைமேவியவப்பனேயாலவாயினின்மேவியவப்பனே (௩)

பண்டயன்றலையொன்றுமறுத்தியேபாகமோதினர்பாவமறுத்தியே
துண்டவெண்பிறைசென்னியிருத்தியேதூயவெள்ளெருதேறியிருத்தியே
கண்டுகாமனைவேவவிழித்தியேகாதலில்லவர்தம்மையிழித்தியே
பண்டநாயகனேமிகுகண்டனேயாலவாயினின்மேவியகண்டனே. (௪)

சென்றுதாதையுகுத்தனன்பாலையேசீறியன்புசெகுத்தனன்பாலையே
வென்றிசேர்மழுக்கொண்டுமுன்காலையேவீடவெட்டிடக்கண்டுமுன்காலையே
நின்றமாணியையோடினகங்கையானிலவமலர்ப்புத்ததனகங்கையா
லன்றுநின்னுருவாகத்தடவியேயாலவாயரனாகத்தடவியே. (௫)

நக்கமேசுவர்நாடுமோருருமேநாதன்மேனியின்மாசுணமூருமே
தக்கபூமனைச்சுதத்தக்கருள்ளாடேதாரமுய்த்ததுபாணற்கருளொடே
மிக்கதென்னனவெனதேவிக்கணியையேமெல்லநல்கியதொண்டர்க்கணியையே
யக்கினொரமுதுண்கலனோடுமேயாலவாயரனாருமையோடுமே. (௬)

வெய்யவன்பல்லுகுத்ததுகுட்டியேவெங்கண்மாசுணங்கையதுகுட்டியே
மையனையனலாடியமெய்யனேமன்பிறைணினைவார்க்கருண்மெய்யனே
வையமுய்யவன்றுண்டதுகாளமேவள்ளல்கையதுமேவுகங்காளமே
மையமேற்றதுரைப்பதுவீணையேயாலவாயரன்கையதுவீணையே. (௭)

தோள்கள்பத்தொடுபத்துமயக்கியேதொக்கதேவர்செருக்கையமைக்கியே
வாளரக்கனிலத்துகளித்துமேவந்தமாலவரைகண்டுகளித்துமே

நீள்பொருப்பையெடுத்தவுன்மத்தனேநின்விரற்றலையான்மதமத்தனே
யாளுமாதிமுறித்ததுமெய்கொலோவாலவாயரனுய்த்ததுமெய்கொலோ.

பங்கயத்துளநான்முகன்மாலொடேபாதநீண்முடிநேடிடமாலொடே
துங்கநற்றழலின்னுருவாயுமேதூயபாடலப்பின்றதுவாயுமே
செங்கயூற்கணிஞரிடுபிச்சையேசென்றுகொண்டுணாசெய்வதுபிச்சையே
யங்கியைத்திகழ்விப்பதிடக்கையேயாலவாயரனாரிடக்கையே. (௮)

தேரரோடமணாக்குலகாளையேதேவர்நாடொறுஞ்சேர்வதுகாளையே
கோரமட்டதுபுண்டரிகத்தையேகொண்டநீள்கழல்புண்டரிகத்தையே
நேரிஞாகளழித்ததுநாகமேநீள்சடைத்திகழ்கின்றவுநாகமே
யாரமாகவுகந்ததுமென்பதேயாலவாயரனாரிடமென்பதே. (௧௦)

ஈனஞானிகடம்மொடுவிரகனேயேறுபல்பொருண்முத்தமிழ்விரகனே
யானகாழியுண்ஞானசம்பந்தனேயாலவாயினின்மேயசம்பந்தனே
யானவானவர்வாயினுள [illegible] னேயன்பரானவர்வாயினுளத்தனே
நானுரைத்தனசெந்தமிழ்பத்துமேவல்லவர்க்கிவைநற்றமிழ்பத்துமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருவீழிமிழலை-திருவியமகம்.

திருச்சிற்றம்பலம்.

துன்றுகொன்றைநஞ்சடையதேதூயகண்டநஞ்சடையதே
கன்றின்மானிடக்கையதேகல்லின்மானிடக்கையதே
யென்றுமேறுவதிடவமேயென்னிடைப்பலியிடவமே
நின்றதும்மிழலையுள்ளுமேநீரெனைச்சிறிதுள்ளுமே. (௧)

ஓதிவாயதும்மறைகளேயுரைப்பதும்பலமறைகளே
பாதிகொண்டதும்மாதையேபணிகிறேன்மிகுமாதையே
காதுசேர்கனங்குழையரோகாதலார்கனங்குழையரோ
வீதிவாய்மிகும்வேதியாமிழலைமேவியவேதியா. (௨)

பாடுகின்றபண்டாரமேபத்தரன்னபண்டாரமே
சூடுகின்றதும்மத்தமேதொழுதவென்னையுன்மத்தமே
நீடுசெய்வதுந்தக்கதேநின்னைநானினைத்தக்கதே
நாடுசேர்மிழலையூருமேநாகநஞ்சழலையூருமே (௩)

கட்டுகின்றகழ்நாகமேகாய்ந்ததும்மதனாகமே
யிட்டமாவதிசைபாடலேயிசைந்தநூலினமைபாடலே
கொட்டுவானமுழவம்வாணனேகுலாயசீர்மிழலைவாணனே
நட்டமாடுவதுசந்தியேநானுய்தற்கிரவுசந்தியே. (௪)

ஓவிலாதிடுங்கரணமேயுன்னுமென்னுடைக்கரணமே
யேவுசேர்வுநின்னாணையேயருளினின்றபோற்றாணையே
பாவியாதுரைமெய்யிலேபயின்றநின்னடிமெய்யிலே
மேவினான்விறற்கண்ணனேமிழலைமேயமுக்கண்ணனே. (௫)

வாய்ந்தமேனியெரிவண்ணமேமகிழ்ந்துபாடுவதுவண்ணமே
காய்ந்துவீழ்ந்தவன்காலனேகடுநடஞ்செயுங்காலனே
போந்ததெம்மிடையிரவிலேயும்மிடைக்கள்ளமிரவிலே
மேய்ந்ததும்மிழலையென்பதேவிரும்பியேயணிவதென்பதே. (௬)

அப்பியன்றகண்ணயனுமேயமரர்கோமகனுமயனுமே
யொப்பிலின்றமரர்தருவதேயொண்கையாலமர்தருவதே
மெய்ப்பயின்றவரிருக்கையேமிழலையூருமதிருக்கையே
செப்புமின்னெருதுமேயுமேசேர்வுமக்கெருதுமேயுமே. (௭)

தானவக்குலம்விளக்கியேதாரகைச்செலவிளக்கியே
வானடர்த்தகயிலாயமேவந்துமேவுகயிலாயமே
தானெடுத்தவலரக்கனேதடமுடித்திரளரக்கனே
மேனடைச்செலவிருப்பனேமிழலைநற்பதியிருப்பனே (௮)

காயமிக்கதொருபன்றியேகலந்தநின்னுருபன்றியே
யேயவிப்புவிமயங்கவேயிருவர்தாமனமயங்கவே
தூயமெய்த்திரள்கண்டனேதோன்றிநின்றமணிகண்டனே
மேயவித்துயில்விலக்கணாமிழலைமேவியவிலக்கணா (௯)

கஞ்சியைக்குலவுகையரோகலக்கமாருமணையரோ
யஞ்சவாதிலருள்செய்யநீயணைந்திடும்பரிசுசெய்யநீ
வஞ்சனேவரவுமல்லையேமதித்தெனைச்சிறிதுமல்லையே
வெஞ்சலின்றிவருவித்தகாமிழலைசேருமவிறல்வித்தகா. (௧௦)

மேயசெஞ்சடையினப்பனேமிழலைமேவியவெனப்பனே
யேயுமாசெயவிருப்பனேயிசைந்தவாசெயவிருப்பனே
காயவர்க்கசம்பந்தனேகாழிஞானசம்பந்தனே
வாயுரைத்ததமிழ்பத்துமேவல்லவர்க்குநிலைபத்துமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

## ஸ்ரீகாழி-திருமாலைமாற்று.

திருச்சிற்றம்பலம்.

யாமாமாநீயாமாமாயாழீகாமாகாணாகா
காணாகாமாகாழீயாமாமாயாநீமாமாயா (௧)

யாகாயாழீகாயாகாதாயாராராதாயாயா
யாயாதாராராயாதாகாயாகாழீயாகாயா. (௨)

தாவாமூவாதாசாகாழீநாதாநீயாமாமா
மாமாயாநீதாநாழீகாசாதாவாமூவாதா. (௩)

நீவாவாயாகாயாழீகாவாவானோவாராமே
மேராவானோவாவாகாழீயாகாயாவாவாநீ. (௪)

யாகாலாமேயாகாழீயாமேதாவீதாயாவீ
வீயாதாவீதாமேயாழீகாயாமேலாகாயா. (ரு)

மேலேபோகாமேதேழீகாலாலேகாலானாயே
யேனாலாகாலேலாகாழீதேமேகாபோலேமே (சு)

நீயாமாநீயேயாமாதாவேழீகாநீதானே
னேதாநீகாழீவேதாமாயாயேநீமாயாநீ. (எ)

நேணவராவிழயாசைழியேவேகதளேரியளாயுழிகா
காழியுளாயரிளேதகவேயேழிசையாழவிராவணனே. (அ)

காலேமேகாணீகாழீகாலேமாலேமேபூ
பூமேலேமாலேகாழீகாணீகாலேமேலேகா. (கூ)

வேரியுமேணவகாழியொயேயேனைநிணேமடளோகரதே
தேரகளோடமணேநினையேயேயொழிகாவணமேயுரிவே. (க0)

நேரகழாமிதயாசழிதாயேனனியேனனிளாயுழிகா
காழியுளானினையேனினையேதாழிசயாதமிழாகரனே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## திருக்கழுமலப்-பண்-புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

மடமலிகொன்றைதுன்றுவாளெருக்கும்வன்னியுமத்தமுஞ்சடைமேற்
படலொலிதிரைகண்மோதியகங்கைத்தலைவனாதம்மிடம்பகரில்
விடலொலிபரந்தவெண்டிரைமுத்தமிப்பிகள்கொணர்ந்துவெள்ளருவி
கடலொலியோதமோதவந்தலைக்குங்கழுமலநகரெனலாமே. (க)

மின்னியவரவும்வெறிமலர்பலவும்விரும்பியதிங்களுந்தங்கு
சென்னியதுடையானதேவர்தமபெருமானசேயிழையொடுமுறைவிடமாம்
பொன்னியனமணியுமுரிகரிமருப்புஞ்சந்தமுமுந்துவன்றிரைகள்
கன்னியராடககடலொலிமலியுங்கழுமலநகரெனலாமே. (உ)

சீருறுதொண்டர்கொண்டடிபோற்றச்செழுமலர்புனலொடுதூபந்
தாருறுகொன்றைதம்முடிவைத்தசைவனாதங்கிடமெங்கு
மூருறுபதிகளுலகுடனபொங்கியொலிபுனலகொளவுடனமிதந்த
காருறுசெம்மைநன்மையான்மிக்ககழுமலநகரெனலாமே. (ங)

மண்ணினாரேத்தவானுளார்பரசவந்தரத்தமரர்கள்போற்றப்
பண்ணினாரெல்லாம்பலபலவேடமுடையவர்பயில்விடமெங்கு
மெண்ணினான்மிக்காரியல்பினானிறைந்தாரேந்திழையவரொடுமைந்தர்
கண்ணினாலின்பங்கண்டொளிபரக்குங்கழுமலநகரெனலாமே. (ச)

சுருதியான்றலையுநாமகண்மூக்குஞ்சுடரவன்கரமுமுன்னியங்கு
பருதியான்பல்லுமிறுத்தவர்கருளும்பரமனார்பயின்றினிதிருக்கை

விருதினான்மறையுமங்கமோராறும்வேள்வியும்வேட்டவர்ஞானங்
கருதினாருலகிற்கருத்துடையார்சேர்கழுமலநகரெனலாமே, (௫)

புற்றில்வாளரவுமாமையும்பூண்டபுநிதனார்பனிமலர்க்கொன்றை
பற்றிவான்மதியஞ்சடையிடைவைத்தபடிறனார்பயினறினிதிருக்கை
செற்றுவன்றிரைகளொன்றொடொன்றோடிச் செயிர்த்துவண்சங்கொடுவங்கங்
கற்றுறைவணர்களகரைக்குவந்துரைக்குங்கழுமலநகரெனலாமே. (௬)

அலைபுனற்கங்கைதங்கியசடையாரடனெடுமதிலொருமூன்றுங்
கொலையிடைச்செந்தீவெந்தறக்கண்டகுழகனார்கோயிலதென்பர்
மலையின்மிக்குயர்ந்தமரக்கலஞ்சரக்குமறறுமற்றிடையிடையெங்குங்
கலைகளித்தேறிக்கானலில்வாழுங்கழுமலநகரெனலாமே (௭)

ஒருக்கமுன்னினையாததக்கனறனவேள்வியுடைதரவுழறியபடையா
ரரக்கனைவரையாலாற்றலன்றழித்தவழகனாரமர்ந்துறைகோயில
பரக்கும்வண்புகழாரபழியவைபார்த்துபலபலவறங்களேபயிற்றிக்
கரக்குமாறறியாவண்மையாலவாழுங்கழுமலநகரெனலாமே. (௮)

அருவரைபொறுத்தவாற்றலினானுமணிகிளர்தாமரையானு
மிருவருமேத்தவெரியுருவானவிறைவனார்றுறைவிடம்வினவி
லொருவரிவ்வுலகில்வாழ்கிலாவண்ணமொலிபுனல்வெள்ளமுன்பரப்பக்
கருவரைசூழ்ந்தகடலிடைமிதக்குங்கழுமலநகரெனலாமே. (௯)

உரிந்துயருருவினுடைதவிர்ந்தாருமதத்துகிலபோர்த்துழல்வாருந்
தெரிந்துபுனமொழிகளசெபபினகேளாச்செம்மையார் நன்மையாலுறைவாங்
குருந்துயாக்கோங்குகொடிவிடுமுல்லைமல்லிகைசெண்பகம்வேங்கை
கருந்தடங்கண்ணின்மங்கைமார்கொய்யுங்கழுமலநகரெனலாமே (௧0)

கானலங்கழனியோதம்வந்துலவுங்கழுமலநகருறைவாரமேல
ஞானசம்பந்தனற்றமிழ்மாலை நன்மையாலுரைசெய்துநவிலவா
ரூனசம்பந்தத்துறுபிணிநீங்கியுள்ளமுமொருவழிக்கொண்டு
வானிடைவாழ்வர்மண்மிசைபிறவாரமற்றிதற்காணையுநமதே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

## திருவீழிமிழலை - பண் புறநீர்மை

திருச்சிற்றம்பலம்.

புள்ளித்தோலாடைபூண்பதுநாகம்பூசுசாந்தம்பொடிநீறு
கொள்ளித்தீவிளக்குக்கூளிகள்கூட்டங்காளியைக்குணஞ்செய்கூத்துடையோ
னள்ளற்காரமையகடுவான்மதியமேய்க்கமுட்டாழைகளானே
வெள்ளைக்கொம்பீனுமவிரிபொழில்வீழிமிழலையானெனவினைகெடுமே. (௧)

இசைந்தவாறடியாரிடுதுவல்வானோரிழுக்குசாந்தனத்திளங்கமலப்
பசும்பொன்வாசிகைமேற்பரப்புவாய்க்கரப்பாய்பத்திசெய்யாதவர்பக்க

வசும்புபாய்கழனியலர்கயன்முதலோடடுத்தரிநதெடுத்தவான்சும்மை
விசும்புதூர்ப்பனபோலவிம்மியவீழி மிழலையானெனவினைகெடுமே. (உ)

நிருத்தனாறங்கனீற்றனான்மறைபனீலமார்மிடற்றனெற்றிக்க
ணொருத்தன்மற்றெல்லாவுயிர்கட்குருவாயுளனிலன்கேடிலியுமைகோன்
றிருத்தமாய்நாளுமாடுநீரப்பொய்கைசிறியவர்றிவினின்மிக்க
விருத்தராயடிவீழ்ந்திடம்புகுமவீழிமிழலையானெனவினைகெடுமே. (ஙு)

தாங்கருங்காலந்தவிரவந்திருவர்தம்மொடுங்கூடினாரங்கம்
பாங்கினாற்பிரித்துப்பண்டுபோல்லெல்லாம்பண்ணியகண்ணுதற்பரமர்
தேங்கொள்பூங்கமுகுதெங்கிளங்கொடிமாசசெண்பகம்வண்பலாவிலுப்பை
வேங்கைபூமகிழாலவெயிற்புகாவீழிமிழலையானெனவினைகெடுமே. (ச)

கூசுமாமயானங்கோயிலவாயிற்கட்குடவயிற்றனசிலபூதம்
பூசுமாசாந்தம்பூதிமெல்லோதிபாதிநாறபொங்காவரையோன்
வாசமாம்புன்னைமௌவல்செங்கழுநீர்மலரணைந்தெழுந்தவான்றென்றல்
வீசுமாம்பொழிறேனாறுவலைசோவீழிமிழலையானெனவினைகெடுமே. (ரு)

பாதியோர்மாதாமாலுமோர்பாகர்பங்கயத்தயனுமோர்பால
ராதியாய்நடுவாயந்தமாயநின்றவடிகளாரமராகட்கமரா
போதுசேர்சென்னிப்புரூரவாப்பணிசெயபூசுராபூமகனனைய
வேதியர்வேதத்தொலியறாவீழிமிழலையானெனவினைகெடுமே (சா)

தன்றவம்பெரியசலந்தரனுடலந்தடிந்தசக்கரமெனக்கருளென
றன்றரிவழிபட்டிழிச்சியவிமானத்திறைவனபிறையணிசடைய
னின்றநாள்காலையிருந்தநாண்மாலைகிடந்தமண்மேலவருகலியை
வென்றவேதியாகளவிழாவறாவீழிமிழலையானெனவினைகெடுமே. (எ)

கடுத்தவாளரக்கனகைலையன்றெடுத்தகரமுரஞ்சிரநெரிந்தலற
வடாததேதோர்விரலாலஞ்செழுத்துரைக்கவருளினன்றடமிகுநெடுவாள்
படித்தனான்மறைகேட்டிருந்தபைங்கிளிகளபதங்களையோதப்பாடிருந்த
விடைகள்குலம்பயிற்றும்விரிபொழில்வீழிமிழலையானெனவினைகெடுமே. (அ)

அளவிடலுற்றவயனொடுமாலுமண்டமண்கிண்டியுங்காணா
முளையெரியாயமூர்த்தியைத்தீர்த்தமுகமணமுதல்வனைமுத்தைத்
தளையவிழ்கமலத்தவிசின்மேலனனந்தனனிளமபெடையொடும்புல்கி
விளைகதிர்கவரிவீசவீற்றிருக்குமிழலையானெனவினைகெடுமே (கூ)

கஞ்சிப்போதுடையார்கையிற்கோசாரக்கலதிகள்கட்டுரைவிட்டு
வஞ்சித்தேவிரியவெழுந்தநஞ்சதனையுண்டமராககமுதருளி
யிஞ்சிக்கேகதலிக்கனிவிழக்கமுகினகுலையொடுமபழமவிழத்தெங்கின்
மிஞ்சுக்கேமஞ்சுசேர்பொழில்வீழிமிழலையானெனவினைகெடுமே. (கO)

வேந்தர்வந்திறைஞ்சவேதியர்வீழிமிழலையுள்விண்ணிழிவிமானத்
[illegible]ந்ததன்றேவியோடுறைகின்றவீசனையெம்பெருமானைத்

தோய்ந்தநீர்த்தோணிபுரத்துறைமறையோன்றூமொழிஞானசம்பந்தன்
வாய்ந்தபாமாலைவாய்நவில்வாரைவானவாவழிபடுவாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.



## திருவாலவாய்-பண்-புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

மங்கையர்க்கரசிவளவர்கோன்பாவைவரிவளக்கைமடமானி
பங்கயச்செல்விபாண்டிமாதேவிபணிசெய்துநாடொறும்பரவப்
பொங்கழலுருவன்பூதநாயகனால்வேதமும்பொருள்களுமருளி
யங்கயற்கண்ணிதன்னொடுமமர்ந்தவாலவாயாவதுமிதுவே (க)

வெற்றவேயடியாரடிமிசைவீழும்விருப்பினன்வெள்ளைநீறணியுங்
கொற்றவன்றனக்குமந்திரியாயகுலச்சிறைகுலாவிநின்றேத்து
மொற்றைவெள்விடையனும்பராதலைவனுலகினியியற்கையையொழிந்திட்
டற்றவர்க்கற்றசிவனுறைகின்றவாலவாயாவதுமிதுவே. (உ)

செந்துவர்வாயாள்சேலனகண்ணாள்சிவன்றிருநீற்றினைவளர்க்கும்
பந்தணைவிரலாள்பாண்டிமாதேவிபணிசெய்யபாரிடைநிலவுஞ்
சந்தமார்தரளம்பாம்புநீர்மத்தந்தண்ணெருக்கமலர்வன்னி
யந்திவான்மதிசேர்சடைமுடியண்ணலாலவாயாவதுமிதுவே. (௩)

கணங்களாய்வரினுந்தமியராய்வரினுமடியவர்தங்களைக்கண்டாற்
குணங்கொடுபணியுங்குலச்சிறைகுலாவுங்கோபுரஞ்சூழ்மணிக்கோயின்
மணங்கமழ்கொன்றைவாளராமதியம்வன்னிவண்கூவிளமாலை
யணங்குவீற்றிருந்தசடைமுடியண்ணலாலவாயாவதுமிதுவே. (௪)

செய்யதாமரைமேலன்னமேயனையசேயிழைதிருநுதற்செல்வி
பையரவல்குற்பாண்டிமாதேவிநாடொறும்பணிந்தினிதேத்த
வெய்யவேற்சூலம்பாசமங்குசமான்விரிகதிர்மழுவுடன்றரித்த
வையனாருமையோடின்புறுகின்றவாலவாயாவதுமிதுவே. (௫)

நலமிலராகநலமதுண்டாகநாடவர்நாடறிகின்ற
குலமிலராகக்குலமதுண்டாகத்தவம்பணிகுலச்சிறைபரவுங்
கலைமலிகரத்தன்மூவிலைவேலன்கரியுரிமூடியகண்ட
னலைமலிபுனல்சேர்சடைமுடியண்ணலாலவாயாவதுமிதுவே. (௬)

முத்தின்றாழ்வடமுஞ்சந்தனக்குழம்புநீறுந்தன்மார்பினின்முயங்கப்
பத்தியார்கின்றபாண்டிமாதேவிபாங்கொடுபணிசெயநின்ற
சுத்தமார்பளிங்கின்பெருமலையுடனேசுடர்மரகதமடுத்தாற்போ
லத்தனாருமையோடின்புறுகின்றவாலவாயாவதுமிதுவே. (எ)

நாவணங்கியல்வாமஞ்செழுத்தோதிநல்லராய்நல்லியல்வாகுங்
கோவணம்பூதிசாதனங்கண்டாற்றொழுதெழுகுலச்சிறைபோற்ற

வேவணங்கியல்வாமிராவணன்றிண்டோளிருபதுநெரிதரவூன்றி
யாவணங்கொண்டசடைமுடியண்ணலாலவாயாவதுமிதுவே

மண்ணெலாநிகழமன்னனாய்மன்னுமணிமுடிச்சோழன்றன்மகளாம்
பண்ணினேர்மொழியாள்பாண்டிமாதேவிபாங்கினாற்பணிசெய்துபரவ
விண்ணுளாரிருவாகிமொடுமேலுமளப்பரிதாம்வகைநின்ற
வண்ணலாருமையோடின்புறுகின்றவாலவாயாவதிதுவே.

தொண்டராயுள்ளார்திசைதிசைதோறுந்தொழுததன்குணத்தினைக்குலாவ
கண்டுநாடோறுமின்புறுகின்றகுலச்சிறைகருதிநின்றேத்தக
குண்டராயுள்ளாசாக்கியபாதங்களகுறியினகணெறியிடைவாரா
வண்டநாயகனாரனமர்ந்துவீற்றிருந்தவாலவாயாவதுமிதுவே, (க

பன்னலம்புணருமபாண்டிமாதேவிகுலச்சிறையெனுமிவர்பணியு
மன்னலம்பெறுசீராலவாயீசனதிருவடியாங்கவைபோற்றிக
கன்னலம்பெரியகாழியுளஞானசமபநதனசெநதமிழிவைகொண
டின்னலம்பாடவல்லவரிமையோரேததவீற்றிருப்பவரினிதே, (க

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பந்தணநல்லூர்-பண் - புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

இடறினார்கூற்றைப்பொடிசெயதாமதிலையிவைசொல்லிபுலகெழுந்தேத்தக்
கடறினாராவாகாறறுளாராவாகாதலித்துறைதருகோயில
கொடிறனாயாதுங்குறைவிலார்தாமபோயக்கோவணங்கொண்டுகூத்தாடும்
படிறனாபோலும்பநதணநலலூாநின்றவெமபசுபதியாரே, (௧

கழியுளாரெனவுங்கடலுளாரெனவுங்காட்டுளார்நாட்டுளாரெனவும்
வழியுளாரெனவுமலையுளாரெனவுமண்ணுளார்விண்ணுளாரெனவுஞ்
சுழியுளாரெனவுஞ்சுவடுதாமறியாதொண்டர்வாயவநதனசொலலும்
பழியுளார்போலுமபநதணநலலூாநின்றவெம்பசுபதியாரே. (உ

காட்டினாரெனவுநாட்டினாரெனவுங்கடுநதொழிற்காலனைக்காலால்
வீட்டினாரெனவுஞ்சாநதவெண்ணீறுபூசியோா்வெண்மதிசடைமேற்
சூட்டினாரெனவுஞ்சுவடுதாமறியார்சொலலுனசொல்லுநாலவேதப்
பாட்டினாபோலும்பநதணநலலூார்நின்றவெம்பசுபதியாரே, (௩

முருகினார்பொழில்சூழுலகினாரேத்தமொய்த்தபல்பணங்களின்றுயர்கண்
டுருகினாராகியுறுதிபோநதுளளமொண்மையாமலொளிதிகழ்மேனி
கருதினாரெல்லாங்கைதொழுதேத்தக்கடலுணஞ்சமுதமாவாங்கிப்
பருகினாபோலும்பந்தணநலலூார்நின்றவெமபசுபதியாரே, (௪

பொன்னினார்கொன்றையிருவடங்கிடநதுபொறிகிளர்பூணநூல்புரள
மின்னினாருருவின்மிளிர்வதோரரவமேவுவெண்ணீறுமெய்பூசித்

துன்னினார்நால்வர்க்கறமமர்ந்தருளித்தொன்மையார்தோற்றமுங்கேடும்
பன்னினார்போலும்பந்தணைநல்லூர்நின்றவெம்பசுபதியாரே. (௫)

ஒண்பொனாரனையவண்ணல்வாழ்கெனவுமுமையவள்கணவன்வாழ்கெனவு
மண்பினாற்பிரியாரல்லுநண்பகலுமடியவரடியிணைதொழவே
நண்பினாலல்லாநல்லவொன்றேத்தவல்லவாதீயவொன்றேகதும்
பண்பினார்போலும்பந்தணைநல்லூர்நின்றவெம்பசுபதியாரே. (௬)

எற்றினாரேதுமிடைகொள்வாரில்லையிருநிலம்வானுலகெல்லை
தெற்றினார்தங்கள்காரணமாகச்செருமலைந்தடியிணைசேர்வான்
முற்றினார்வாழுமும்மதில்வேவமூவிலைச்சூலமுமழுவும்
பற்றினார்போலும்பந்தணைநல்லூர்நின்றவெம்பசுபதியாரே (௭)

ஒலிசெய்தகுழலின்முழவமதியம்பவோசையாலாடலறாத
கலிசெய்தபூதங்கையினாலிடவேகாலினாற்பாய்தலுமரக்கன
வலிகொள்வர்புலியினுரிகொள்வரேனைவாழ்வுநன்றானுமோர்தலையிற
பலிகொள்வர்போலும்பந்தணைநல்லூர்நின்றவெம்பசுபதியாரே. (௮)

சேற்றினார்பொய்கைத்தாமரையானுஞ்செங்கணமாலிவரிருகூறாக்
தோற்றினார்தோற்றத்தொன்மையையறியாத்துணைமையும்பெருமையுந்தம்
சாற்றினார்சாற்றியாற்றலோமென்னச்சரண்கொடுத்தவர்செய்தபாவம் [மிற்
பாற்றினார்போலும்பந்தணைநல்லூர்நின்றவெம்பசுபதியாரே (௯-௰)

கல்லிசைபூணக்கலையொலியோவாக்கழுமலமுதுபதிதன்னி
னல்லிசையாளன்புல்லிசைகேளாநற்றமிழ்ஞானசம்பந்தன
பல்லிசைபகுவாய்ப்படுதலையேந்திமேவியபந்தணைநல்லூர்
சொல்லியபாடல்பத்தும்வல்லவர்மேற்றொல்வினைசூழகிலாவே (௧௧)

திருச்சிற்றம்பலம்.



## திருவோமாம்புலியூர் - பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்.

பூங்கொடிமடவாளுமையொருபாகம்புரிதருசடைமுடியடிகள்
வீங்கிருணட்டமாடுமெம்மிறைதாவிரும்பொடுமுறைவிடம்வினவிற
றேங்கமழ்பொழிலிற்செழுமலர்கோதிச்செறிதருவண்டிசைபாடு
மோங்கியபுகழாரோமமாம்புலியூருடையவர்வடதளியதுவே. (௧)

சம்பரற்கருளிச்சலந்தரன்வீயத்தழலுமிழ்சக்கரம்படைத்த
வெம்பெருமானாரிமையவரேத்தவினிதினங்குறைவிடம்வினவி
லம்பரமாகியழலுமிழ்புகைக்கினாகுதியான்மழைபொழியு
மும்பர்களேத்துமோமமாம்புலியூருடையவர்வடதளியதுவே (௨)

பாங்குடைத்தவத்துப்பகீரதற்கருளிப்படர்சடைக்கரந்தநீர்க்கங்கை
தாங்குதறவிர்த்துத்தராதலத்திழித்தத்தத்துவனுறைவிடம்வினவி
லாங்கெரிமூன்றுமமர்ந்துடனிருந்தவங்கையாலாகுதிவேட்டு
மோங்கியமறையோரோமமாம்புலியூருடையவர்வடதளியதுவே

புற்றரவணிந்து நீறுமெய்பூசிப்பூதங்கள்சூழ்தரவூரூர்
பெற்றமொன்றேறிப்பெய்பலிகொள்ளுமபிரானவனுறைவிடம்வினவிற்
கற்றநாலவேதமங்கமோராறுங்கருத்திஞரருத்தியாற்றெரியு
முற்றபலபுகழாரோமமாம்புலியூருடையவர்வடதளியதுவே. (ச)

நிலத்தவரவானமாள்பவர்கீழோர்துயர்கெடநெடியமாற்கருளா
லலைத்தவலலசுரராசறவாழியளித்தவனுறைவிடமவினவிற்
சலத்திஞறபொருளகளவேண்டுதல்செய்யாத்தன்மையார்நன்மையான்மிக்க
வுலப்பிலபலபுகழாரோமமாம்புலியூருடையவர்வடதளியதுவே. (ரு)

மணந்திகழ்திசைகளெட்டுமேழிசையுமலியுமாறங்கமைவேள்வி
யிணைநதஞலவேதமூனறெரியிரண்டுபிறபபெனவொருமையாலுணருங்
குணங்களுமவற்றின்கொள்பொருள்குற்றமற்றவையுறறதுமெல்லா
முணாநதவர்வாழ்மோமமாம்புலியூருடையவர்வடதளியதுவே. (சு-எ)

தலையொருபத்துநதடககையதிரடடிதானுடையரக்கனொண்கயிலை
யலைவதுசெய்தவவன்றிறலெடுத்தவாதியாருறைவிடமவினவில
மலையெனவோங்குமாளிகைநிலவுமாமதிளமாற்றலரென்று
முலவுபலபுகழாரோமமாமபுலியூருடையவாவடதளியதுவே. (அ)

கள்ளவிழ்மலர்மேலிருநதவன்கரியோனென்றிவாகாண்பரிதாய
வொள்ளொரியுருவருமையவளோடுமுகநதினிதுறைவிடம்வினவிற்
பள்ளநீர்வாளைபாய்தருகழனிப்பனிமலர்ச்சோலைசூழாலை
யொள்ளியபுகழாரோமமாமபுலியூருடையவர்வடதளியதுவே. (கூ)

தெள்ளியரல்லாத்தேரரோடமணர்தடுக்கொடுசீவரமுடிக்குங்
கள்ளமார்மனததுக்கலதிகட்கருளாக்கடவுளாருறைவிடம்வினவி
னள்ளிருளயாமநான்மறைதெரிநதுநலகதிகழ்மூனறெரியோம்பு
மொள்ளியார்வாழுமோமமாமபுலியூருடையவர்வடதளியதுவே. (க0)

விளைதருவயலுள்வெயிலசெறிபவளமேதிகண்மேய்புலத்திடறி
யொளிதரமலருமோமமாமபுலியூருடையவர்வடதளியரனை
களிதருநிவப்பிறகாண்டகுசெலவககாழியுண்ஞானசம்பந்
னனிதருபாடலபத்தும்வல்லார்களமரலோகத்திருபபாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## திருக்கோணமாமலை-பண்-புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

நிரைகழலரவஞ்சிலம்பொலியலம்புநிமலர்நீறணிதிருமேனி
வரைகெழுமகளோர்பாகமாப்புணர்நதவடிவினர்கொடியணிவிடையர்
கரைகெழுசந்துங்காரகிறபிளவுமளப்பருங்கனமணிவரன்றிக்
குரைகடலோதநித்திலங்கொழிக்குங்கோணமாமலையமர்ந்தாரே. (க)

கடிதெனவந்தகரிதனையுரித்துவவ்வுரிமேனிமேற்போர்ப்பர்
பிடியனநடையாள்பெயவளைமடநதைபிறைநுதலவளொடுமுடனாய்க்
கொடிதெனக்கதறுங்குரைகடல்சூழ்நதுகொள்ளமுனித்திலஞ்சுமந்து
குடிதனைநெருக்கிப்பெருக்கமாய்த்தோன்றுங்கோணமாமலையமர்ந்தாரே. (உ)

பனித்திளந்திங்கட்பைந்தலைநாகம்படர்சடைமுடியிடைவைத்தார்
கனித்திளந்துவர்வாய்க்காரிகைபாகமாகமுன்கலந்தவர்மதின்மேற
றனித்தபேருருவவிழித்தழனாகந்தாங்கியமேருவெஞ்சிலையாக்
குனித்ததோர்வில்லார்குரைகடல்சூழ்ந்தகோணமாமலையமர்ந்தாரே, (௩)

பழித்திளங்கங்கைசடைமுடிவைத்துப்பாங்குடைமதனனைப்பொடியா
விழித்தவன்றேவிவேண்டமுன்கொடுத்தவிமலனார்கமலமார்பாதர்
தெழித்துமுன்னரற்றுஞ்செழுங்கடற்றரளஞ்செம்பொனுமிப்பியுஞ்சுமந்து
கொழித்துவன்றிரைகள்கரையிடைச்சேர்க்குங்கோணமாமலையமர்ந்தாரே ()

தாயினுநல்லதலைவரென்றடியார்தம்மடிபோற்றிசைப்பார்கள்
வாயினுமனத்துமருவிநின்றகலாமாண்பினர்காண்பலவேடர்
நோயிலும்பிணியுந்தொழிலர்பானீக்கிநுழைதருநூலினர்ஞாலங்
கோயிலுஞ்சுனையுங்கடலுடன்சூழ்ந்தகோணமாமலையமர்ந்தாரே, (௫)

பரிந்துநன்மனத்தால்வழிபடுமாணிதன்னுயிர்மேல்வருங்கூற்றைத்
திரிந்திடாவண்ணமுதைத்தவற்கருளுஞ்செம்மையாரம்மையாருடையார்
விரிந்துயர்மௌவன்மாதவிபுன்னைவேங்கைவண்செருந்திசெண்பகத்தின்
குருந்தொடுமுல்லைகொடிவிடும்பொழில்சூழ்கோணமாமலையமர்ந்தாரே (௭)

எடுத்தவன்றருக்கையிழித்தவர்விரலாலேத்திடவாத்தமாம்பேறு
தொடுத்தவர்செல்வந்தோன்றியபிறப்புமிறப்பறியாதவர்வேள்வி
தடுத்தவர்வனப்பால்வைத்ததோர்கருணைதன்னருட்பெருமையும்வாழ்வுங்
கொடுத்தவர்விரும்பும்பெரும்புகழாளர்கோணமாமலையமர்ந்தாரே. (௮)

அருவராதொருகைவெண்டலையேந்தியகந்தொறும்பலியுடன்புக்க
பெருவராயுறையுநீர்மையர்சீர்மைப்பெருங்கடல்வண்ணனும்பிரம
னிருவருமறியாவண்ணமொள்ளெரியாயுயர்ந்தவர்பெயர்ந்தநன்மாற்கு
குருவராயினார்குரைகழல்வணங்கக்கோணமாமலையமர்ந்தாரே. (௯)

நின்றுணுஞ்சமணுமிருந்துணுந்தேருநெறியலாதனபுறங்கூற
வென்றுநஞ்சுண்ணும்பரிசினரொருபான்மெல்லியலொடுமுடனாகித்
துன்றுமொண்பௌவமவ்வலுஞ்சூழ்ந்துதாழ்ந்துறுதிரைபலமோதிக்
குன்றுமொண்கானல்வாசம்வந்துலவுங்கோணமாமலையமர்ந்தாரே. (௰)

குற்றமில்லாதார்குரைகடல்சூழ்ந்தகோணமாமலையமர்ந்தாரைக்
கற்றுணர்கேள்விக்காழியர்பெருமான்கருத்துடைஞானசம்பந்த
னுற்றசெந்தமிழார்மாலையீரைந்துமுரைப்பவர்கேட்பவருயர்ந்தோர்
சுற்றமுமாகித்தொல்வினையடையார்தோன்றுவர்வானிடைப்பொலிந்தே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

ஈழநாட்டிலுள்ளது
சுவாமிபெயர்-கோணேசர்-தேவியார்-மாதுமையம்மை.

——(*)——

## திருவெள்ளடை-பண்-அந்தாளிக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

சுண்ணவெண்ணீறணிமார்பிற்றோல்புனைந்
தெண்ணரும்பலகணமேத்தநின்றாடுவார்
விண்ணவர்பைம்பொழில்வெள்ளடைமேவிய
பெண்ணமர்மேனியெம்பிஞ்ஞகனாரே. (௧)

திரைபுல்குகயகைதிகழ்சடைவைத்து
வரைமகளோடுடனாடுதிர்மல்கு
விரைகமழ்தண்பொழில்வெள்ளடைமேவிய
வரைமல்குவாளரவாட்டுகந்தீரே. (௨)

அடையலர்தொன்னகர்மூன்றெரித்தன்ன
நடைமடமங்கையோர்பாகநயந்து
விடையுகந்தேறுதிர்வெள்ளடைமேவிய
சடையமர்வெண்பிறைச்சங்கரனீரே. (௩)

வளங்கிளர்கங்கைமடவரலோடு
களம்படவாடுதிர்காடரங்காக
விளங்கியதண்பொழில்வெள்ளடைமேவிய
விளம்பிறைசேர்சடையெமபெருமானே. (௪)

சுரிகுழநலலதுடியிடையோடு
பொரிபுலகுகாட்டிடையாடுதிர்பொங்கு
விரிதருபைம்பொழிலவெள்ளடைமேவிய
வெரிமழுவாட்படையெநதைபிரானே. (௫)

காவியங்கண்மடவாளொடுங்காட்டிடைத்
தீயகலேநதினராடுதிர்தேன்மலர்
மேவியதண்பொழில்வெள்ளடைமேவிய
வாவினிலேநதுகொண்டாட்டுகந்தீரே. (௬-௭-௮-௯-௧0-௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருநல்லூர்ப்பெருமணம்-பண்-அந்தாளிகுறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

கலலூர்ப்பெருமணம்வேண்டாகழுமலம்
பலலூர்ப்பெருமணமபாட்டுமெய்யாயத்தில
செல்லூர்ப்பெருமணஞ்சூடலரோதொண்டா
...லூர்ப்பெருமணமேயநம்பானே. (௧)

தருமணலோதஞ்சேர்தண்கடனித்திலம்
பருமணலாக்கொண்டுபாவைநலலார்கள்
வருமணங்கூட்டிமணஞ்செயுநலலூராப்
பெருமணததான்பெண்ணோர்பாகங்கொண்டானே. (௨)

அன்புறுசிந்தையராகியடியவர்
நன்புறுநல்லூர்ப்பெருமணமேவிநின்
றின்புறுமெந்தையிணையடியேத்துவார்
துன்புறுவாரல்லர்தொண்டுசெய்வாரே (௩)

வலலியநதோலுடையார்ப்பதுபோர்ப்பது
கொல்லியலவேழத்துரிவிரிகோவண
நல்லியலார்தொழுநல்லூர்ப்பெருமணம்

ஏறுகந்தீரிடுகாட்டெரியாடிவெண்
ணீறுகந்தீர்நிரையார்விரிதேன்கொன்றை
நாறுகந்தீர்திருநல்லூர்ப்பெருமணம்
வேறுகந்தீருமைகூறுகந்தீரே (௫)

சிட்டப்பட்டார்க்கெளியான்செங்கண்வேட்டுவப்
பட்டங்கட்டுஞ்சென்னியானபதியாவது
நட்டக்கொட்டாட்டறாநல்லூர்ப்பெருமணத்
திட்டப்பட்டாலொத்தீராலெம்பிரானீரே. (௬)

மேகத்தகண்டனெண்டோளன்வெண்ணீற்றுமை
பாகத்தன்பாய்புலித்தோலொடுபந்தித்த
நாகத்தநல்லூர்ப்பெருமணத்தானல்ல
போகத்தன்யோகத்தையேபுரிந்தானே. (௭)

தக்கிருந்தீரன்றுதாளாலரக்கனை
யுக்கிருந்தொல்கவுயர்வரைக்கீழிட்டு
நக்கிருந்தீரின்றுநல்லூர்ப்பெருமணம்
புக்கிருந்தீரெமைப்போக்கருளீரே (அ)

ஏலுந்தண்டாமரையானுமியல்புடை
மாலுந்தம்மாண்பறிகின்றிலாமறை
நாலுந்தம்பாட்டென்பர்நல்லூர்ப்பெருமணம்
போலுந்தங்கோயில்புரிசடையார்க்கே (௯)

ஆதரமணொடுசாக்கியர்தாஞ்சொலும்
பேதைமைகேட்டுப்பிணக்குறுவீர்வம்மி
னாதனைநல்லூர்ப்பெருமணமேவிய
வேதனதாடொழவீடெளிதாமே. (௰)

நறும்பொழிற்காழியுண்ஞானசம்பந்தன்
பெறும்பதநல்லூர்ப்பெருமணத்தானை
யுறும்பொருளாற்சொன்னவொண்டமிழ்வல்லார்க்
கறும்பழிபாவமவலமிலரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - சிவலோகத்தியாகேசர் - தேவியார்-நங்கையுமைநாயகியம்மை

---

மூன்றாந்திருமுறை முற்றிற்று.

---

[illegible]பாமுதலிகளுக்குள் முதன்மையாகிய

திருஞானசம்பந்தசுவாமிகளருளிச்செய்த

மூன்றுதிருமுறையும்

முற்றுப்பெற்றன.

ஆகப்பதிகம் ௩௱அ௰௪

---

# பரமசிவத்தினுடைய

## அட்டவீரட்டம்

---

பூமன்சிரங்கண்டியந்தகன்கோவலபுரமதிகை .. ... *
மாமன்பறியல்சலந்தரன்விற்குடிமாயபழுவூர் .. ... *
காமனகொறுக்கையமனகடவூரிந்தக்காசினியிற .. .. *
றேமன்னுகொன்றையுந்திங்களுஞ்சூடிதனசேவகமே ... ... *

(இதன்பொருள)

கொன்றைப்பூமாலையும் இளந்திங்களுந்தரித்துக கொண்டருளிய பரமசிவம் வீரஞ்செலுத்தியது.—திருககண்டியூரில - பிரமதேவன் சிரங்கொயததும்.—திருககோவலூரில-அந்தகாசுரனை யெரிந்ததும.—திருவதிகையில-திரிபுரம் எரிததும.—திருபபறியலூரில-தககன்முடிதடிந்ததும —திருவிற்குடியில-சலந்தரனைத தலையரிந்தும —திருப்பழுவூரில்-யானையையுரிததும —திருக்கொறுக்கையில-மன்மதனைத்தகனஞ்செயததும.— திருககடவூரில-யமனையுதைத்ததும்.

---